# திருப்புகழமீர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

சௌமிய மாசி

உ

முருகா

# இலக்ஷதீப நல்விழா

## நிகழ்ச்சி நிரல்

காங்கேயநல்லூர் ஸ்ரீ முருகப் பெருமான் திருக்கோயிலில் நாளது சௌமிய மாசி 16-ஆம் நாள் (27 - 2 - 1970) வெள்ளிக் கிழமையன்று பின்வருமாறு இலக்ஷதீப விழா சிறப்பாகக் கொண்டாடப் பெறும். அன்பர்கள் கண்டு கேட்டு நலமடையலாம்.

27 - 2 - 1970

| | |
|---|---|
| மாலை 6-00 மணிக்கு | தீப வழிபாடு |
| 6-15 | தருமபுரம் திரு P. சுவாமிநாதன் அவர்கள் வடபழநி திரு N. ஆறுமுகம் ஓதுவார் தேவாரம் |
| 7-00 | திருமதி மணி கிருஷ்ணசுவாமி குழுவினர் இன்னிசையரங்கு. |
| 9-00 | திருமுருக கிருபானந்தவாரியவர்கள் விரிவுரை: 'முருகன் பெருமை' |
| 10-30 | சுவாமி எழுந்தருளல்—கோபுரவாயில் காட்சி, மாடவீதியுலா. திருவிடைமருதூர் திரு. P. வீருசாமிப் பிள்ளையவர்கள் குழுவினர் நாதசுரம், வேலூர் வேலப்பாடி V. K. குப்புசாமி குழுவினர் கிளாரினெட், வாண வேடிக்கை முதலியன. |

28 - 7 - 1970

| | |
|---|---|
| காலை 8-00 | ஏகாந்த சேவை; திரு. திருப்புகழ்மணியவர்கள், பவாநி திரு. மு. கண்ணப்பர் அவர்கள் திருப்புகழ்ப் பாராயணம். |

---

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"



| மலர் 34 | ஸௌமிய ஞு—மாசிமீ<br>பிப்ரவரி 1970 | இதழ் 11 |
|---|---|---|



## திருப்புகழ்

இருளளக மவிழமதி போத முத்த ரும்ப
இலகுகயல் புரளஇரு பார பொற்ற னங்கள்
இளகஇடை துவளவளை பூச லிட்டி ரங்க எவராலும்

எழுதரிய கலைநெகிழ ஆசை மெத்த வுந்தி
இனியசுழி மடுவினிடை மூழ்கி நட்பொ டந்த
இதழமுது பருகியுயிர் தேக மொத்தி ருந்து முனிவாறி

முருகுகமழ் மலரமளி மீதி னிற்பு குந்து
முகவனச மலர்குவிய மோக முற்ற ழிந்து
மொழிபதற வசமழிய ஆசை யிற்க விழ்ந்து
விடுபோதும்

முழுதுணர வுடையமுது மாத வத்து யர்ந்த
பழுதில்மறை பயிலுவஎ ஞுத ரித்து நின்று
முனிவர்சுரர் தொழுதுருகு பாத பத்ம மென்று
மறவேனே

ஒருசிறுவன் மணமதுசெய் போதி லெய்த்து வந்து
கிழவடிவு கொடுமுடுகி வாசலிற்பு குந்து
உலகறிய இவனடிமை யாமெ னக்கொ ணர்ந்து
சபையூடே

ஒருபழைய சருகுமடி ஆவ ணத்தை யன்று
உரமொடவ னதுவலிய வேகி ழிக்க நின்று
உதறிமுறை யிடுபழைய வேத வித்தர் தந்த
சிறியோனே

அரியஉடு பதிகடவி யாட கச்சி லம்பொ
டழகுவட மணிமுடிவி யாள மிட்ட ழுந்த
அமரரொடு பலர்முடுகி ஆழி யைக்க டைந்து
அமுதாக

அருளுமரி திருமருக வார ணத்தை யன்று
அறிவினுட னொருகொடியி லேத ரித்து கந்த
அருணகிரி நகரிலெழு கோபுரத்த மர்ந்த பெருமாளே.

### பதவுரை

ஒரு சிறுவன்=ஒப்பற்ற சிறுவனாகிய நம்பியாரூரனுடைய மணம் அது செய் போதில்=திருமணச் சடங்கு நடக்கும்போது, எய்த்து வந்து=இளைப்புடன் அங்கு எழுந்தருளி, கிழ வடிவு கொடு=கிழ வடிவங்கொண்டு, முடுகி=வேகமாக வந்து, வாசலில் புகுந்து=திரு மண வாசலில் புகுந்து, உலகு அறிய=உலகோர் யாவரும் அறியுமாறு, இவன் அடிமை ஆம் என கொணர்ந்து=இந்தச் சிறுவன் எனக்கு அடிமையாம் என ஒரு சீட்டை எடுத்து வந்து, சபை ஊடே=சபையோர்களின் நடுவில், பழைய ஒரு சருகு மடி ஆவணத்தை=பழமையான ஓலைச் சுருளாகிய பத்திரத்தை, அன்று=அந்நாளில், உரமொடு அவன்=வலிமையுடன் அச்சிறுவன், அது வலியவே கிழிக்க நின்று=அதனை வலிதில் பற்றிக் கிழித்தெறியவும் அங்கு நின்று, உதறி முறையிடும்=கை கால்களை உதறிக்கொண்டு முறையோ என்று ஓலமிட்ட, பழைய=பழையவரும், வேத வித்தர் தந்த=வேதத்தை நன்கறிந்தவருமான சிவபெருமான் பெற்ற, சிறியோனே=இளம் புதல்வரே! அரிய உடுபதி கடவி=அருமையான சந்திரனைத் தூணாக இருக்கும்படிச் செலுத்தி வைத்து, ஆடக சிலம்பொடு=பொன்மலையாகிய மேருமலை என்னும் மத்துடன், அழகுவடம்=அழகிய கயிறாக, மணி முடி வியாளம் இட்டு அழுந்த=இரத்தின முடிகளையுடைய ஆதிசேடனைப் பூட்டி அழுத்தமாக, அமரரொடு பலர்=தேவர்களுடன் பலரும், முடுகி=வேகமாக, ஆழியைக் கடைந்து=கடலைக் கடைந்து, அமுது ஆக=அமுது வரச்செய்து, (அதை) அருளும் அரி=தேவர்கட்குப் பகிர்ந்தளித்த திருமாலின், திருமருக=அழகிய மருகரே! வாரணத்தை அன்று=சேவலை அந்நாள், அறிவினுடன்=நல்ல யோசனையுடன், ஒரு கொடியிலே தரித்து உகந்த=ஒரு கொடியிலே நிறுத்தித் தரித்து

மகிழ்ந்தவரே! அருணகிரி நகரில் = திருவண்ணுமலை நகரத்தில், எழு கோபுரத்து அமர்ந்த = ஏழு நிலையுள்ள கோபுர வாயிலில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! இருள் அளகம் அவிழ = இருண்ட கரிய கூந்தல் அவிழவும், மதிபோத முத்து அரும்ப = சந்திரனைப்போன்ற முகத்தில் உண்டான முத்துப்போன்ற வேர்வை வெளித் தோன்றவும், இலகு கயல் புரள = விளங்குகின்ற கயல் மீன் போன்ற கண்கள் புரளவும், இரு பார பொன் தனங்கள் இளக = இரண்டு பாரமான அழகிய கொங்கைகள் நெகிழ்ச்சியுறவும், இடை துவள = இடை துவட்சியடையவும், வளைபூசல் இட்டு இரங்க = கைவளைகள் ஒன்ருெடொன்று மோதி ஒலிக்கவும், எவராலும் எழுத அரிய கலை நெகிழ = யாராலும் எழுத முடியாததான ஆடை தளர்ச்சி யடையவும், ஆசை மெத்த = ஆசை அதிகரிக்கவும், உந்தி இனிய சுழிமடுவின் இடை மூழ்கி = கொப்பூழாகிய இனிமை தரும் சுழி போன்ற மடுவின் நடுவில் முழுகி, நட்பொடு = நட்பு பூண்டு, அந்த இதழ் அமுது பருகி = அந்த வாயிதழ்களின் அமுதத்தை உண்டு, உயிர் தேகம் ஒத்து இருந்து = உயிரும் உடம்பும் ஒத்திருந்து, முனிவு ஆறி = கோபந் தணிந்து, முருகு கமழ் = நறுமணம் வீசுகின்ற, மலர் அமளி மீதினில் புகுந்து = மலர்ப் படுக்கையில் படுத்து, முகவனச மலர் குவிய = முகமாகிய தாமரை மலர் சுருங்க, மோகம் உற்று அழிந்து = மோகவிடாய் கொண்டு அதில் அழிந்து, மொழி பதற = சொற்கள் தடுமாறவும், வசம் அழிய = தன் வசம் கெட்டழியவும், ஆசையிற் கவிழ்ந்து விடு போது = ஆசையிலேயே கவிழ்ந்து முழுகிவிட்டபோதிலும்கூட, முழுது உணர உடைய = எல்லாம் உணரும்படியாகவும் அடைந்துள்ள, முது மாதவத்து = முதிர்ந்த மகாதவ நிலையிலும், உயர்ந்த = உயர்ந்ததும், பழுதில் = குற்றமில்லாததுமான, மறை = வேதத்திலும், பயிலுவ என = நெருங்கி விளங்குவன என்று, ஆதரித்து நின்று = விரும்பிப் போற்றி செய்து நின்று, முனிவர் = முனிவர்களும், சுரர் = தேவர்களும், தொழுது உருகு = வணங்கி உருகுகின்ற, பாதபத்மம் என்றும் மறவேனே = உமது பாத தாமரைகளை அடியேன் என்றும் மறக்க மாட்டேன்.

## பொழிப்புரை

நம்பியாரூரன் என்ற ஒப்பற்ற இளைஞருக்குத் திருமணம் நிகழும்போதில், கிழவேதியராக இளைப்புடன் வேகமாகத் திருமணப் பந்தரில் புகுந்து, அந்தச் சபையில், உலகமறிய "இவன் என் அடிமை" என்று கூறி, பழமையான ஒரு ஆவண ஓலைச் சுருளைக் கொணர்ந்து காட்ட, நம்பியாரூரர் அதனைவலிய வாங்கிக் கிழித்து எறிய, கைகால்களை உதறி "முறையோ" என்று ஓலமிட்ட பழைய வேதவித்தகராகிய சிவபெருமான் பெற்ற இளம்பாலகரே! அருமையான நட்சத்திரங்களின் தலைவனுன சந்திரனைத் தூணுக நிறுத்தி, மணிகளையுடைய முடிக

ளுடன் கூடிய ஆதிசேடனாகிய நாகராஜனை அழகிய தாம்புக் கயிறாகக் கொண்டு, தேவர்கள் முதல் பலர் திருப்பாற்கடலை வேகமாகக் கடைய எழுந்த அமிர்தத்தை அமரர்களுக்குப் பகிர்ந்து வழங்கியருளிய திருமாலின் திருமருகரே! சேவலை அன்று நல்ல யோசனையுடன் ஒரு கொடியில் நிறுத்தியேந்தி மகிழ்ந்தவரே! திருவண்ணாமலை நகரத்தில் ஏழுநிலைக் கோபுர வாசலில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! இருண்ட கரிய கூந்தல் அவிழவும், சந்திரனையொத்த முகத்தில் முத்து போன்ற வேர்வை தோன்றவும், விளங்குங் கயல் மீன் போன்ற கண்கள் புரளவும், அழகிய தனபாரங்கள் நெகிழ்ச்சியுறவும், இடை துவளவும், கைவளைகள் ஒன்றுடன் ஒன்று மோதி ஒலி செய்யவும், யாராலும் எழுத வொண்ணாததான ஆடை நெகிழ வும், ஆசை அதிகரிக்கவும் கொட்பூழாகிய இனிமையான சுழி யனைய மடுவின் நடுவில் முழுகி, நட்பு பூண்டு, அந்த வாயித ழின் அமுதத்தைக் குடித்து, உயிரும் உடம்பும் ஒன்றுபட்டு கோபந் தணிந்து, நறுமணம் வீசும் மலர்ப் படுக்கையின்மீது படுத்து, தாமரைபோன்ற முகஞ்சுருங்க. மோகங்கொண்டு அதில் அழிந்து சொற்கள் தடுமாறவும், தன் வசம் அழியவும், ஆசையிலேயே கவிழ்ந்து முழுகிவிட்ட சமயத்திலுங்கூட, எல் லாம் உணரும்படியாக அடைந்துள்ள முதிர்ந்த மகா தவ நிலை யிலும், உயர்ந்ததும் குற்றமில்லாததுமான வேதத்திலும் விளங்குவன என்று விரும்பி தேவர்களும் முனிவர்களும் பணிந்து உருகுகின்ற உமது பாத தாமரைகளை அடியேன் என்றும் மறக்க மாட்டேன்.

## விரிவுரை

இத்திருப்புகழின் முற்பகுதி மூன்று அடிகள் கலவி நலத்தை விரித்துக் கூறுகின்றன.

**ஆசையில் கவிழ்ந்து விடுபோதும்...பாதபத்ம மென்று மறவேனே :—**

"முருகா! ஆசைக் கடலில் கவிழ்ந்து மூழ்கினாலும் தேவரீ ருடைய திருவடித் தாமரையை ஒருபோதும் மறக்கமாட் டேன்" என்று அருணகிரிப் பெருமான், தமக்குள்ள உறு தியை நன்கு நவில்கின்றார்.

"கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக் கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேல்மறவேன்" —கந்தரலங்காரம்.

**முழுதுணர வுடைய முதுமாதவத்து :—**

எல்லாவற்றையும் ஒருங்கேயுணரும் ஆற்றலைத் தருவது தவம். இத்தகைய மாதவத்தில் விளங்குவது முருகன் திருவடி.

உயர்ந்த பழுதில் மறைபயிலுவன :—

குற்றமில்லாது உயர்ந்த வேதங்களில் விளங்குவது அப்பெருமானுடைய திருவடி.

ஆதரித்துநின்று முனிவர்சுரர் தொழுதுருகு பாதபத்மம் :—

முனிவர்களும் தேவர்களும் அன்புடன் முருகப் பெருமானுடைய திருவடிகளைத் தொழுது உள்ளம் உருகுகின்றார்கள்.

ஒருசிறுவன் மணமதுசெய்போதி லெய்த்துவந்து
கிழவடிவு கொடுமுடுகி வாசலிற் புகுந்து
உலகறிய இவனடிமை யாமெனக் கொணர்ந்து சபையூடே

ஒருபழைய சருகுமடி ஆவணத்தையன்று
உரமொடவ னதுவலிய வேகிழிக்கநின்று
உதறிமுறை யிடுபழைய வேதவித்தர் :

இந்த ஆறு வரிகளில் அடிகளார் தடுத்தாட்கொண்ட புராணத்தை இரத்தினச் சுருக்கமாக, வெகு அழகாக உரைக்கின்றார்.

வரலாறு

திருநாவலூரில் ஆதி சைவர் குலத்திலே சடையனாரும் இசை ஞானியாரும் செய்த மாதவத்தின் பயனாய் நம்பியாரூரர் அவதரித்தார்.

நரசிங்கமுனையர் என்ற மன்னர் இவரை மகனாகக் கொண்டு வளர்த்தார். சகல கலைகளிலும் வல்லவரானார். நாவலர்கோன் என்று பேர் பெற்றார்.

மணம்வந்தபுத்தூரில் சடங்கவி சிவாசாரியருடைய புதல்வியை மணம்பேசி, மிகுந்த சிறப்புடன் திருமணச் சடங்கு தொடங்கப் பெற்றது.

சிவபெருமான் தாம் முன் தந்த வரத்தின்படி அவரைத் தடுத்தாட் கொள்ளும் பொருட்டு அழகு திரண்டு ஒரு கிழவுருக் கொண்டதுபோல் திருமணப் பந்தலில் வந்து, "இவன் என் அடிமை" என்று கூறி வாதிட்டார்.

நம்பியாரூரர் "ஒரு அந்தணன் மற்றொரு அந்தணனுக்கு அடிமை என்பது எங்கும் இல்லாதது. நீ பித்தனோ?" என்று கூறினார்.

கிழ வேதியர் "சிறுவனே! என்னைப் பித்தன் என்றும் பேயன் என்றும் இகழ்கின்றனை; அதற்காக நான் வருத்தப்பட மாட்டேன். அந்தக் காலத்தில் உன் பாட்டன் எழுதிக்

கொடுத்த அடிமை ஒலே இருக்கின்றது. இது என்ன பொய் வழக்கா ?'' என்ருர்.

சுந்தரர் கிழவரைத் தொடர்ந்து சென்று அந்த வோலேயை வலிதில் பிடுங்கிக் கிழித்து எறிந்தார்.

பிறகு திருவெண்ணெய்நல்லூரில் உள்ள அம்பலத்தில் இந்த வழக்கு விசாரிக்கப்பட்டது. பெரியோர்கள், ''ஆரூரன் உமக்கு அடிமை என்பதற்கு என்ன சான்றுளது?'' என்று கேட்டார்கள்.

கிழவேதியர், "இவன் முன் கிழித்த வோலே நகல்; மூல வோலே வேறு உளது'' என்று கூறி மற்ருெரு ஓலேயை எடுத்துக் கொடுத்தார்.

அருமறை நாவலாதி சைவன்ஆ ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய்நல்லூர் பித்தனுக் கியானும் என்பால்
வருமுறை மரபுளாரும் வழித்தொண்டு செய்தற்கோலே
இருமையால் எழுதி நோந்தேன் இதற்கிவை என்னெழுத்து.

இந்த வோலேயின் எழுத்து ஒப்புமையைப் பார்த்து நம்பியாரூரர் அடிமையென்பதை ஒப்புக்கொண்டார். ஓலேயைப் பிடுங்கிக் கிழித்தபோது இறைவன் முறையிட்டதைச் சேக்கிழார் பெருமான் கூறும் அழகிய செந்தமிழ்ப் பாடல் இது.

மறைகளாயினமுன் போற்றி மலர்ப்பதம் பற்றி நின்ற
இறைவனேத் தொடர்ந்துபற்றி எழுதுமா ளோலே வாங்கி
அறைகழல் அண்ணல் ஆளாய் அந்தணர் செய்தல் என்ன
முறையெனக் கீறியிட்டான் முறையிட்டான் முடிவிலாதான்.

எல்லாவுயிர்களும் ஈசனுக்கு என்றும் அடிமைகள். அன்றே அடிமைப் பத்திரம் எழுதப்பட்டுளது. இதனேத் திருமந்திரம் கூறுமாறு காண்க.

என்ருயோ டென்னப்பன் ஏழேழ் பிறவியும்
அன்றே சிவனுக் கெழுதிய ஆவணம்
ஒன்ருய் உலகம் படைத்தான் எழுதிஞன்
நின்ருன் முகில் வண்ணன் நேரெழுத்தாயே.

இனி இவ்வாறு இறைவன் ஆவணம் எழுதி அடிமை கொண்டதை வில்லிபுத்தூரரும் தாம் பாடிய மாபாரதத்தில் அழகுபெறக் கூறியுள்ளார்.

''ஐயானனன் இயல்வாணனே அடிமைக்கொள மெய்யே
பொய்யாவணம் எழுதும்பதி பொற்போடு வணங்கா''

**அரியவுடு பதிகடவி யாடகச் சிலம்பொடழகுவட மணிமுடிவியாளமிட்டழுந்த அமரரொடு பலர் முடுகி ஆழியைக் கடைந்து அமுதாக :—**

நரை திரை மூப்பு முதலிய துன்பந் தொலைய அமுதம் உண்ணவேண்டும் என்று அமரர்கள் கருதினர்கள். சந்திரனைத் தூணாக நிறுத்தி, பொன் மேரு மலையை மத்தாகக் கொண்டு ஆதிசேடனைத் தாம்புக் கயிருகக் கொண்டு கடைந்தார்கள்.

மந்தர நெடுவரை மத்துவாசுகி
அந்தமில் கடைகயி றடைகல் ஆழியான்
சந்திரன் தூண் எதிர்தருக்கி வாங்குநர்
இந்திரன் முதலிய அமரர் ஏனையோர் —கம்பராமாயணம்.

**வாரணத்தையன்று அறிவினுட னொருகொடியிலே தரித்துகந்த :—**

வாரணம்—கோழி.

சிவபெருமானுக்கு இடபக் கொடி; திருமாலுக்குக் கருடக் கொடி; பிரமனுக்கு வேதக் கொடி ; இந்திரனுக்கு இடிக் கொடி; மன்மதனுக்கு மீனக் கொடி. இடபம், கருடன் ஆகிய இவைகள் கொடிகளில் எழுதிய வடிவங்கள் தான். முருகப் பெருமானுடைய கொடி ஒன்றுதான் கூவி ஒலிப்பது. மேலும் சேவல் 'ஓ' என்று பிரணவ நாதத்தை எழுப்புவது அதனல் அதனை முருகவேள் தன் கொடியில் நிறுத்தியருளினர்.

"ஆரணங்கள் தானைநாட வாரணங்கை மேவுமாதி
யான செந்தில் வாழ்வதான பெருமாளே.
—(நாலுமைந்து) திருப்புகழ்

## கருத்துரை

அருணை மேவும் அண்ணலே! எப்போதும் உன் திருவடியை மறவேன்.

## திருப்புகழ்

இறுகு மணிமுலை மருவு தரளமு
மெரியு முமிழ்மதி நிலவாலே
இரவி யெனதுயிர் கவர வருகுழ
லிசையி லுறுகட லலையாலே

தறுகண் ரதிபதி மதனன் விடுகொடு
சரமி லெளியெனு மழியாதே
தருண மணிபொழி லருணை நகருறை
சயில மிசையினில் வரவேணும்

முறுகு திரிபுர மறுகு கனலெழ
முறுவ லுடையவர் குருநாதா
முடிய கொடுமுடி யசுரர் பொடிபட
முடுகு மரகத மயில்வீரா

குறவர் மடமக ளமுத கனதன
குவடு படுமொரு திருமார்பா
கொடிய சுடரிலை தனையு மெழுகடல்
குறுக விடவல பெருமாளே.

## பதவுரை

முறுகு திரிபுர மறுகு = கடுமையுடைய முப்புரங்களின் வீதிகளில், கனல் எழ = நெருப்பு எழும்படி, முறுவல் உடையவர் = புன்சிரிப்புச் செய்தவராகிய சிவபெருமானுடைய, குருநாதா = குருநாதரே! முடிய கொடுமுடி = எல்லா மலையுச்சிகளிலும் வசித்திருந்த, அசுரர் பொடி பட = அசுரர்கள் பொடிபட்டு அழியுமாறு, முடுகு = செலுத்திய, மரகத மயில் வீரா = பச்சை மயில் வீரரே! குறவர் மடமகள் = குறவர் திருமகளாகிய வள்ளிநாயகியின், அமுத கனதன குவடுபடும் = அமுதம் பொதிந்த கனத்த கொங்கைகளாகிய மலைகள் தாக்கும், ஒரு திரு மார்பா = ஒப்பற்ற அழகிய மார்பையுடையவரே! கொடிய சுடர் இலைதனையும் = உக்கிரம் பொருந்திய ஒளியுடைய இலைபோன்ற வேலாயுதத்தை, எழுகடல் குறுக விடவல = ஏழு சமுத்திரங்களும் வற்றிச் சுருங்குமாறு செலுத்தவல்ல, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! இறுகும் அணிமுலை மருவு தரளமும் = நெருங்கி யழுத்தமாயுள்ள அழகிய தனங்களின் மீதுள்ள முத்துமாலையும், எரியும் உமிழ் மதி நிலவாலே = தீ உமிழுமாறு காய்கின்ற சந்திரனுடைய நிலாவொளியாலும், இரவி = என்னை வருத்தி, எனது உயிர் கவர வரும் = என்னுயிரைக் கவர்வதற்கு எழுகின்ற, குழல் இசையில் = புல்லாங்குழலின் இசையாலும், உறுகடல் அலையாலே = பொருந்திய கடல் அலையின் ஒலியாலும், தறுகண் = அஞ்சாமையுடையவனும், ரதிபதி = இரதியின் கணவனும் ஆகிய, மதனன் விடு கொடு சரமில் = மன்மதன் விடுகின்ற கொடிய கணையினாலும், எளியெனும் அழியாதே = எளியேன் நொந்து அழிவுபடாமல், தருணம் = தக்க தருணத்தில், அணி பொழில் = அழகிய சோலைகள் சூழ்ந்த, அருணை நகர் உறை = திருவண்ணாமலைப் பதியில் உள்ள, சயில மிசையினில் வரவேணும் = மலை மீது வந்தருள வேண்டும்.

## பொழிப்புரை

கடுமையுடைய முப்புர வீதிகளில் நெருப்பு எழும்படி புன்னகை புரிந்த சிவபெருமானுக்குக் குருநாதரே! எல்லா மலை

யுச்சிகளிலும் வசித்திருந்த அசுரர்கள் பொடிபட்டு அழியுமாறு செலுத்திய பச்சை மயில் வாகனத்தையுடைய வீரமூர்த்தியே! குறவர் குலமகளாம் வள்ளிநாயகியின் அமுதம் பொருந்திய கனத்த கொங்கை மலைகள் தாக்கும் ஒப்பற்ற அழகிய திரு மார்பினரே! உக்கிரம் பொருந்திய ஒளியுடைய இலைபோன்ற வேலாயுதத்தை ஏழு கடல்களும் வற்றிச்சுருங்குமாறு செலுத்த வல்ல பெருமிதமுடையவரே! நெருங்கி அழுத்தமாயுள்ள அழகிய கொங்கையின் மீதுள்ள முத்து மாலையும் தீ உமிழுமாறு காய்கின்ற சந்திரனுடைய நிலா ஒளியாலும், என்னுயிரைக் கவருமாறு வருந்தி எழுகின்ற புல்லாங்குழலின் இசையாலும், கடலின் அலையோசையாலும், அஞ்சாமையுடைய இரதிதேவியின் கணவனாகிய மன்மதன் விடுகின்ற கொடிய கணைகளாலும் எளியேன் அழியாவண்ணம், தக்க தருணத்தில் அழகிய சோலை சூழ்ந்த அருணைப் பதியில் உள்ள மலையின்மீது வந்தருள வேண்டும்.

## விரிவுரை

இத்திருப்புகழ் அகப் பொருள் துறையில் பாடப்பெற்றது. முருகனை நாயகனாக அடைய விரும்பிய ஆன்மாவாகிய பெண் முருகனை வேண்டுகின்றாள்.

நிலவும், குழலோசையும், கடலோசையும், காமன் கணையும் விரக நோயை மிகுவிப்பன.

இரவி—இராவி என்ற சொல் இரவியென வந்தது. இராவுதல்—வருத்துதல.

**தறுகண் ரதிபதி மதனன் :—**

தறுகண்—அஞ்சாமை. மன்மதன், திருமால், பிரமன், இந்திரன், சந்திரன, விசுவாமித்திரர், காசிபர் முதலிய மிகப் பெரியவர்களையாலும் அஞ்சாது பூங்கணை பொழிந்து மையல் ஊட்டுவான். சரத்தில் என்ற சொல் சரமில் என வந்தது.

**திரிபுர மறுகு கனலெழ முறுவலுடையவர் :—**

மும்மல காரியமாகிய முப்புரத்தைச் சிவபெருமான்சிரித்து எரித்தருளினார்.

என்னசெயங் கொண்டார் இவர்என்றுன் முப்புரத்தைச்
சொன்னமய மாய்ச்சமைத்த சோழீசர்—பின்னும்
சிரித்துச்செயங் கொண்டார் சித்தசனைக்கண்ணால்
எரித்துச் செயங் கொண்டார் இவர்.

## கருத்துரை

வேலாயுதப் பெருமானே! அருணையில் தோன்றி என் தனிமை தவிர்த்துக் காத்தருள்.

உ

முருகா

# கற்பு

---

## குந்தவை

குந்தவை என்ற பெருமாட்டி ராஜராஜனுடைய தமக்கை. அம் மாதரசி சிவபக்தியிற் சிறந்தவள். கூரிய அறிவும் சீரிய ஒழுக்கமும் உடையவள்.

இராஜராஜன் ஒப்பாரும் மிக்காரும் இன்றி மாநிலங் காவல் புரிந் தான். அவனுடைய ஆட்சி மாட்சி பெற்று விளங்கியது. இப்பெருந் தகையின் ஆட்சி கி.பி. 1085 முதல் 1114 வரை மிக வுயர்வாக நடை பெற்றது. இமயம் முதல் குமரி வரை ஆண்டு பலப்பல அறம் புரிந் தான். இவ்வேந்தர் பெருமானை வளர்த்து, நன்னெறி புகட்டி உயர் குணச் செம்மலாகப் புரிந்தவள் குந்தவைப் பிராட்டியார்.

குந்தவைப் பிராட்டியின் கணவன் வல்லவரையர் வந்தியத்தேவர் என்ற வீரர்கோமான். இம்மாதரசி தமது தந்தையாராகிய பராந்தகச் சோழரின், தாயாராகிய வானவன் மாதேவியார். இருவருடைய திரு வுருவப் படிமங்களைத் தன் தம்பியார் புதுக்கிய தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருளப் புரிந்தாள். தந்தையாரின் நினைவாகத் தஞ்சையிலே சுந்தரச்சோழ விண்ணகர் ஆதுலர்சாலை ஒன்று நிறுவி நில தானங்கள் பல புரிந்தாள்.

குன்றத்தூரில் வேளாளர்கள் செழித்துச் சீரும் சிறப்பும் பொருந்தி வாழ்ந்தார்கள். வாய்மையும் தூய்மையும் உடையவராய், வேளாண்குல திலகராய் சிவநேச முதலியார் வாழ்ந்தார். அவர் அறப் பண்பும் அறிவுத் திறமும் உடையவராய்த் திகழ்ந்தார்.

முதலியாருக்கு ஒரே மகன். சிவபாத சேகரன் என்ற அவன் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினன். காளைப் பருவம் எய்திய அவன் அழகில் மன்மதனை யொத்து ஏற்றமுந் தோற்றமும் படைத்திருந் தான்.

சிவநேச முதலியாருக்கு அன்புடைய தோழர் மணிக்கோடி முதலியார். மணிக்கோடி முதலியார் ஏழை. ஆனால் வறுமையில் செம்மையுடையராய், உண்மைக்கு உறைவிடமாக வாழ்ந்தார். இவ ருக்கு ஒரு புதல்வி. அவள் பேர் தேன்மொழி. மான்விழியுடைய அவள் தங்கச்சிலைபோல் வளர்ந்தாள்.

சிவநேச முதலியாரும், மணிக்கோடி முதலியாரும் குடும்ப நண் பர்கள். இவர் வீட்டுக்கு அவர்களும், அவர் வீட்டுக்கு இவர்களும்

போக வர இருந்தார்கள். அதனுல் சிவபாதசேகரன் தேன்மொழியுடன் பழகும் வாய்ப்பு ஏற்பட்டது. அவளிடம் உள்ளத்தைப் பதித்துவிட்டான். தேன்மொழிக்கும் சிவபாதசேகரன்மீது அளவற்ற அன்பு. இவ்வாறு ஒருவரை யொருவர் விரும்பி, இருவரும் இதயம் மாறிப்புக்கு, ஒருவர் உள்ளத்தில் ஒருவராக உறைந்து வந்தார்கள்.

ஏழையின் புதல்வி தனக்கு மருமகளாக அமைவது, தன் பெருமிதத்துக்கு ஏற்றதன்று என்று கருதினுர் சிவநேசர். ஆதலால் சிவபாதசேகரன் தேன்மொழியுடன் பழகுவதைக் கண்டித்தார். தன் விருப்பத்துக்குத் தந்தை முட்டுக்கட்டையாக இருப்பதையறிந்த சிவபாதசேகரன் உள்ளம் உடைந்து போனுன். பிதாவிடம் பெருமதிப்புடையவன். பெற்ற பிதாவைப் பகைத்து தேன்மொழியையடைய அவன் மனம் துணியவில்லே. ஆனுல் அவளே மறக்கவும், அவள்மீது வைத்த காதலேத் துறக்கவும் முடியவில்லே.

கொள்ளித் தலேயின் எறும்பதுபோல் உள்ளம் குலேந்தது. இந்த இடர்ப்பாட்டினுல் மனம் நொந்த அவன் பிதாவிடம் கூருமல் புறப்பட்டான். விலகி நெடுந்தூரம் போய்விட்டால் சிறிது சாந்தி கிடைக்கும் என்று கருதிக் கப்பலேறி இலங்கை போய்ச் சேர்ந்தான்.

அளவற்ற செல்வத்தையும் தாய் தந்தையரையுந் துறந்த அவன் இலங்கை போய் விவசாய ஆராய்ச்சிப் பண்ணேயில் சேர்ந்து மகிழ்ச்சியின்றிக் காலத்தைக் கடத்தினுன்.

மகனுடைய பிரிவுத் துயரம் சிவநேச முதலியாரை மிகவும் வாட்டிவருத்தியது. "அந்தோ! நமக்கு ஒரே மகன். அவன் விருப்பைத் தடுத்து அவன் வெறுப்பைத் தேடிக்கொண்டோம். அவன் எங்குச் சென்ருனே? எங்கே அலேகின்ருனே? பெற்றமனம் பித்தாகிப் பேதுறுகின்றது. தெய்வமே! என் மகன் விரைவில் திரும்பி வந்து எங்கள்பால் சேர அருள் செய். அவனுக்கு மனமாற்றத்தைக் கொடு" என்று கடவுளிடம் முறையிட்டார்.

ஆண்டுகள் பல அகன்றன. இனி மகன் வருவான் என்ற நம்பிக்கையை முதலியார் இழந்தார். அவருக்கும் வயது முதிர்ந்துவிட்டது. அவருடைய மனேவியார் புத்திர சோகத்தால் உண்ணுதும் உறங்காதும் உயிர் நீத்தாள். முதலியாருக்கு மகன்—மனேவி என்ற இரு சிறகுகளும் விலகிச் சிறகிழந்த பறவைபோல் பரதவித்தார். ஏராளமான தனது நிலபுலங்கள் யாவற்றையும் விற்றுவிட்டார். அவைகளேக் கொண்டு விலேயுயர்ந்த மாணிக்கங்களே வாங்கினுர். ஒரு அழகிய சந்தனப் பெட்டியில் வைத்துப் பூட்டினுர். அந்தப் பெட்டியையும் சாவியையும், தனது உயிர்த் தோழராகிய மணிக்கோடி முதலியாரிடம் கொடுத்தார்,

"நண்பரே! இதைப் பாதுகாவலாக வைத்திரும். இதனைத் திறந்து பார்க்கக்கூடாது. உம்மை நம்பி இதனை உம்மிடம் ஒப்புவிக்கின்றேன். தெய்வத் திருவருளால் என் மகன் திரும்பி வந்தால் இதனை அவனிடம் சேர்த்துவிடக் கடவீர். சிவபெருமான்மீது ஆணையிடுகின்றேன். நீர் இதனைத் திறந்து பார்க்கக் கூடாது" என்று கூறி அவரிடம் தந்தார். தந்து சில நாட்களில் சிவநேசர் சிவபதம் சேர்ந்தார்.

மணிக்கோடி முதலியார் நண்பருக்கு உரிய நெருப்புக்கடன் நீர்க்கடன்களைச் செய்தார். நம்பிக்கையுடன் நண்பர் தந்த பெட்டியை தக்க இடத்தில் சேமித்து வைத்திருந்தார்.

தேன்மொழிக்குத் தோழனுடைய பிரிவு பெருந்துன்பத்தை விளைவித்தது. அவள் வாடிய பயிர்போல் வருந்தினாள். இனி தன் அன்பின் கருவூலமாகிய ஆர்வலனைக் காண்போமோ? அவனுடன் மருவிவாழும் பெரும்பேறு கிட்டுமோ?" என்று எண்ணி எண்ணி ஏங்கினாள்.

மணிக்கோடி முதலியாருக்கு வறுமையின் சிறுமை வரவர வளர்ந்தது. தனவந்தர்களிடம் நிலம் வாரத்துக்கு வாங்கிப் பயிர் செய்தும் பற்றுக்குறையால் வருந்தினார். தனது வறுமையாகிய தீ கொழுந்து விட்டெரிந்தும், நண்பர் தன்பால் அன்பால் தந்த பெட்டியைத் திறந்து பார்க்கவில்லை. அதனைக் கவரவேண்டும் என்ற எண்ணம் அவருடைய கனவிலும் வரவில்லை. நம்பிக்கைத் துரோகம் கூடாது, கடவுள் நம்மைத் தண்டிப்பார் என்று கருதினார். நேர்மையுடன் தனது வறுமைத் துயரத்தைத் தாங்கிக் கொண்டார்.

தேன்மொழி தந்தையாரைப் பார்த்து "அப்பா! தாங்கள் பலப்பல கடன் தொல்லைகளால் கவலை யடைந்திருக்கின்றீர். சேகர் வருவார் என்ற நம்பிக்கைக்கு இடமேயில்லை. அவர் எங்கு போனாரோ? இருக்கின்றாரா? இல்லையா என்றே தெரியவில்லை. பெரியவர் தந்த பெட்டியைத் திறந்து பார்க்கக்கூடாதா? அதில் உள்ளதைக்கொண்டு உமது கடன் தொல்லைகளைத் தவிர்க்கக்கூடாதா?" என்றாள்.

"மகளே! மனிதனுக்கு நேர்மைதான் உயிர். உயிர் போனாலும் நேர்மையைத் துறக்கக்கூடாது. வறுமை இப்பிறப்பில்தான் வருத்தத்தைத் தரும். நம்பிக்கைத் துரோகத்தால் வரும் பாவம் பல பிறவிகளில் தொடர்ந்து வந்து வாட்டும். ஆதலால் நண்பர் நம்பித் தந்த பெட்டியைத் திறந்து பார்ப்பது பாவம். இந்த எண்ணமே வரக் கூடாது" என்றார் மணிக்கோடி முதலியார்.

இலங்கையில் வாழ்கின்ற சிவபாதசேகரன் தந்தையார் பேய்கள் பூட்டிய தேரில் தென் திசை போவதாகத் தீக்கனவு கண்டான். அவன் துடிதுடித்தான். தந்தையாரை இனிக் காண்போமோ? காண முடி

யாமலேயே போகுமோ?" என்று எண்ணி வருந்தினன். இராம பாணம் போல் விரைந்து புறப்பட்டுத் தாயகம் வந்தான்.

சிவபாதசேகரனுடைய வரவை முதல் நாளே அறிந்து மணிக் கோடி முதலியார் பெரிதும் மகிழ்ச்சி யடைந்தார். தேன்மொழி "தந்தையே! சேகர் வருகின்ருர் என்று தெரிகின்றது. அவர் வருவதற்குள் அந்தப் பெட்டியில் என்ன இருக்கின்றது என்று திறந்து பார்ப்பது நல்லது. நாம் என்ன அதனை எடுத்துக் கொள்ளவா போகின்ருேம்? சும்மா பார்ப்பதில் என்ன பிழை?" என்ருள்.

மணிக்கோடி முதலியார், "குழந்தாய்! நீ கூறுவது பிழை. ஆக்கப் பொறுத்த ஒருவன் ஆரப் பொறுக்கக் கூடாதா? இத்தனை நாள் நாம் அதைத் திறக்கவில்லை. இன்னும் ஒருநாள் பொறுத்திருப்பதில் என்ன அவசரம்? எப்படியும் அவர் வந்தால் உன்னைத்தான் மணந்துகொள்ளு வார். பிறகு அவருடைய உடைமை உனக்குத்தானே? ஆதலால் அவ சரப்பட்டு அநியாயத்தைச் செய்யக்கூடாது" என்ருர்.

பெட்டியில் என்ன உளதோ? காணவேண்டும் என்பதில் தேன் மொழிக்கு மிகுந்த ஆவல்.

சிவபாதசேகரன் குன்றத்தூர் வந்து சேர்ந்தான். தந்தையார் தாயார் இருவருடைய மரணச் செய்தியைக் கேட்டுக் கதறிப் பதறி யழுதான். அவனுடைய பிதா அந்தவூரில் குறுநில மன்னரைப்போல் வாழ்ந்தவர். வீடு நிலம்புலம் தோட்டம் எல்லாம் விற்றுவிட்டதை யறிந்து பெரிதும் கலங்கினன்.

மணிக்கோடி முதலியார் மனைக்குச் சென்ருன். அவர் அன்புடன் வரவேற்ருர். "அப்பா! நலமா? உன் வரவு நல்ல வரவு" என்று கூறி உணவு தந்து இன்முகத்துடன் உபசரித்தார். காமனைப்போல் விளங்கும் அவனைக் கடைக்கண்ணால் பார்த்து தேன்மொழி புன்முறுவல் பூத்தாள். அவளுடைய புன்னகையைக் கண்டு சிவபாதசேகரன் தன்னையே மறந்தான். அவள் முன்னிலும் பன்மடங்கு பொலிவுடன் காட்சி யளித்தாள். பருவமும் உருவமும் சிறந்து நின்ருள். அவளுடைய கூந்தல் நீண்டு சுருண்டு இருண்டு அவன் உள்ளத்தை ஒருங்கு கவர்ந்தது. மீன் விழியால் தேன்மொழி அவனைக் கிறுகிறுக்க வைத்தாள்.

அன்றிரவு சாப்பாட்டுக்குப் பிறகு தனிமையில் மணிக்கோடி முதலியாரைப் பார்த்து, "என் பிதா என்ன சொன்னர். அவருடைய உடைமை யெல்லாம் என்ன ஆயிற்று?" என்று சிவபாதசேகரன் கேட்டான்.

"அப்பா! நீ திடீர் என்று வெளியேறிவிட்டாய். உன் தாயும் தந்தையும் தீராக் கவலையால் ஆருத் துயரமுற்ருர்கள். அன்னையார்

அரனுரடிக் கமலஞ் சேர்ந்தார். உன்னையும் அன்னையையும் பிரிந்த வேதனையால் உன் பிதா தன் உடைமைகள் அனைத்தையும் விற்றுவிட்டார். கடைசி நேரத்தில் என்னை அழைத்தார். இதோ இந்தப் பெட்டியை உன்னிடம் சேர்க்குமாறு என்பால் தந்தார். இதனை மிகவும் கண்காணிப்பாக வைத்துக் காப்பாற்றினேன். இதில் என்ன இருக்கின்றதென்று நான் அறியேன். இந்தா!" என்று கூறி அப் பெட்டியை அவனிடம் தந்தார் மணிக்கோடி முதலியார்.

சிவபாதசேகரன் அப்பெட்டியை ஆவலுடன் திறந்தான். தேன்மொழியும் அருகில் நின்று கண்களை இமைக்காமல் பார்த்தாள். பெட்டியுள் கண்களைப் பறிக்குமபடி ஒளி வீசுகின்ற உயர்ந்த மாணிக்கக்கற்கள் இருந்தன. ஒவ்வொரு கல்லும் பல லட்சம் பெருமதிப்புள்ளது. அத்துடன் பகுதி கருங்கல் துண்டுகளும் இருந்தன. அதனைப் பார்த்து அவன் திடுக்கிட்டான். "என்ன இது? உயர்ந்த மாணிக்கக் கற்களுடன் கருங்கற்கள் இருக்கக் காரணம் யாது? மாணிக்கக் கற்களுடன் கருங்கற்களைத் தந்தையார் வைத்திருப்பாரா? வறுமையின் கொடுமையால் மதிமயங்கி மணிக்கோடி முதலியார் மாணிக்கக்கற்களை எடுத்துக்கொண்டு கருங்கற்களை வைத்திருக்க வேண்டும். தன்னை மோசஞ் செய்துள்ளார்." என்று கருதினன். அவன் உள்ளத்தில் துக்கமும் சீற்றமும் மாறிமாறி புயல் காற்றுப்போல் வீசின. அவன் முகஞ் சிவந்தது. உதடுகள் துடித்தன. புருவங்கள் அசைந்து நெற்றிமீது சென்றன.

"ஐயா! இத்தனை உயர்ந்த மாணிக்கக்கற்களுடன் கருங்கல் கலந்து இருக்க வேண்டிய காரணம் யாது? மாணிக்கத்துடன் கல்லை மடையனகூட வைக்கமாட்டானே? நீர் நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டீர். உங்களைப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகின்றேன். தாங்கள் அபகரித்த மாணிக்கத்தைத் தந்துவிடவும்" என்று கேட்டான்.

இந்த வார்த்தையைக் கேட்டு மணிக்கோடி முதலியார் நடு நடுங்கினர். "சிவ சிவ" என்று நாக்குழறக் கூறினர். "அப்பனே! ஈசனறியக் கூறுகின்றேன். உன்னுடைய தந்தையார் தந்த இப்பெட்டியை என் உயிர்போல் வைத்துக் காப்பாற்றினேன். இதனைத் திறந்து பார்க்கவேயில்லை. இதில் உள்ள சில மாணிக்கங்களைக் கவருகின்ற தீய புத்தி எனக்கு இருந்திருக்குமானல் முழுவதையும் எடுத்துக்கொண்டிருப்பேனே? அப்படியே எடுத்திருந்தாலும் கருங்கற்களை அதனுடன் வைத்திருப்பேனு? இறைவன்மீது ஆணையாகக் கூறுகின்றேன். கருங்கற்கள் இதில் இருக்குங் காரணத்தை நான் அறியேன். உன் தந்தையார் தந்ததை நான் திறந்து பார்க்கவேயில்லை. அப்படியே வைத்திருந்து உன்பால் ஒப்புவித்தேன். என்மீது வீண்பழி சுமத்தாதே. நான் உன் பிதாவுடைய உயிர்த் தோழன். தோழமைத் துரோகம் செய்யமாட்டேன்" என்றார்.

சிவபாதசேகரன் அவருடைய சொற்களை நம்பினானில்லை. அன்று இரவெல்லாம் கடுஞ்சொற்களால் அவருடைய உள்ளத்தைப் பிளந்தான்.

பொழுது புலர்ந்தது. அந்தவூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் போய் தன் வழக்கைக் கூறி முறையிட்டான். அன்று மாலை ஆன்றோர்கள் பலர் கூடினார்கள்.

மணிக்கோடி முதலியாரை யழைத்தார்கள். தனித்தனியே சிவபாதசேகரனையும் மணிக்கோடி முதலியாரையும் விசாரித்தார்கள்.

"பெரியோர்களே! காலஞ்சென்ற சிவநேச முதலியார் என் அரிய நண்பர். நெடுங்காலமாக நான் அவருடன் நகமும் சதையும் போலப் பழகினேன். என் வாழ்நாளில் நான் யாரையும் வஞ்சித்ததில்லை. மனத்தாலும் கள்ளங்கபடுகளை யறியேன். தன் இறுதிக் காலத்தில் இப்பெட்டியை அவர் என்பால் கொடுத்து, என் மகன் வந்தால் இதனைக் கொடுங்கள் என்று கூறினார். நான் இதனை மிகவும் எச்சரிக்கையாக வைத்துக் காப்பாற்றினேன். இதனைத் திறந்து பார்த்தேனில்லை. இறைவன்மீது ஆணை. உண்மை யுரைக்கின்றேன்" என்று கூறினார்.

மணிக்கோடி முதலியாருடைய வார்த்தைகளைக் கேட்டுச் சிலர் இவர் நிரபராதி என்றார்கள். பலர் அவரை நம்பவில்லை. "எடுத்தவன் எடுத்தேன் என்பானா? குற்றத்தை ஒப்புக்கொள்பவன் எங்காவது உண்டா? ஒரு பெரிய மனிதன் விலையுயர்ந்த மாணிக்கங்களுடன் ஒன்றுக்கும் உதவாத கருங்கற்களைப் பெட்டியில் வைத்துப் பூட்டித் தருவானா? இது ஒருபோதும் இராது. வறுமையால் வாடிய இவர் சமயம் வந்தபோது ஒவ்வொரு மாணிக்கமாக எடுத்து விற்று வயிறறை நிரப்பியிருப்பார். பெட்டியில் கருங்கற்களை வைத்திருப்பார். இதில் எள்ளளவும் சந்தேகங் கிடையாது. ஆதலால் இது சுத்த மோசடிதான்" என்று அழுத்தந் திருத்தமாகக் கூறினார்கள். பெரும்பாலோர் அவரைக் குற்றவாளியாகவே கூறியதனால் நியாய சபையில் மணிக்கோடி முதலியார் கள்வர் என்றும், எத்தனை கருங்கல் உளவோ அத்தனை மாணிக்கங்களைத் தரவேண்டும் என்றும் தீர்ப்பு கூறினார்கள்,

மணிக்கோடி முதலியார் கண்ணீர் சொரிந்தார். அவருடைய உள்ளமும் உடம்பும் நடுங்கின. காஞ்சிபுரத்தில் உள்ள மேல் சபைக்குச் சென்று தான் குற்றமற்றவன் என்று கூறி வாதாடினார். மேல் சபையார்கள் இருவர்களுடைய வாக்குமூலங்களைக் கேட்டு, கீழ்ச்சபையார் செய்த தீர்ப்பு சரியானது என்றும் மணிக்கோடி முதலியார் களவு செய்தவர்தான் என்று உறுதி செய்தார்கள்.

மணிக்கோடி முதலியார் தலையில் அடித்துக்கொண்டார். ஊரார்கள் அவரை மோசக்காரன் என்று கூறி இகழ்ந்தார்கள். மணிக் கோடி முதலியார் தான் அரசனிடம் முறையிடுவதாக, மேல்சபை யாரிடம் அனுமதி பெற்ருர். காவலருடன் கைவிலங்கு போடப்பட்டு, தஞ்சை மாநகரம் போனார்.

அரசவையில் அரியணைமீது அமர்ந்துள்ள இராஜராஜனிடம் போய் தன் வழக்கைக் கூறி முறையிட்டார். அரசவையில் அமைச்சர் களும், நியாயாதிபதிகளும், மற்றும் உள்ள அரசவை யுறுப்பினர்களும் அமர்ந்திருந்தார்கள்.

சிவபாதசேகரன் "வேந்தர் பெருமானே! வணக்கம். என் தந்தை சிவநேச முதலியார் குன்றத்தூரில் நிரம்ப நிலபுலன்களுடன் சிற்றர சனைப் போல் செல்வச் சிறப்புடன் வாழ்ந்தார். நான் இலங்கை சென்றிருந்தேன். என் பிதா நிலபுலங்களை விற்று, மாணிக்கங்களை வாங்கி பெட்டியில் வைத்து, இவரிடம் கொடுத்து என்பால் தருமாறு கட்டளையிட்டார். இவர் இதில் உள்ள மாணிக்கங்கள் பலவற்றை எடுத்துக்கொண்டு, கருங்கற்களை வைத்து என்னை ஏமாற்றிவிட்டார். தாங்கள் இது விஷயத்தைச் சிந்தித்து நியாயம் வழங்கவேண்டும்" என்றான்.

மணிக்கோடி முதலியார், "கருணை நிறைந்த சோழர்குலப் பெருந்தகையே! சிவநேச முதலியார் என்னுடைய இனிய தோழர். அவர் மறைவதற்கு முன் இப்பெட்டியை என்பால் தந்து மகனிடம் தருமாறு கூறினார். நான் இதனை ஈசனறியத் திறந்து பார்க்கவேயில்லை. இவர் வந்து சேர்ந்தவுடன் பெட்டியை இவரிடம் தந்தேன். இதில் என்ன இருந்தது என்பதை நான் அறியேன். இதுதான் உண்மை. நான் குற்றமற்றவன். தாங்கள் பேரறிவும் பெருங்கருணையும் படைத் தவர்: நான் களவைக் கனவிலுங் கருதாதவன் என்பதை தாங்கள் நுண்ணறிவால் அறியக் கூடும்" என்றார்.

இராஜராஜ சோழர் பெட்டியில் உள்ள மிக வுயர்ந்த மாணிக்கங் களையும், அத்துடன் இருக்குங் கருங்கற்களையுங் கண்டார். மாணிக்கங் களுடன் கருங்கல்லைப் பெட்டியில் வைத்துப் பூட்ட என்ன காரணம் இருக்க முடியும்? இவ்வாறு எவனும் செய்யமாட்டான். ஆனால் மணிக்கோடியார் முகத்திலும் அவருடைய வார்த்தைகளிலும் சூது இருப்பதாகத் தெரியவில்லை. இது மிகவும் சிக்கலான வழக்காக இருக் கின்றதே. நியாய விரோதமாகத் தீர்ப்பளிப்பது நமது அரசாட்சிக்குப் பொருந்தாது" என்று கருதினார். நெடுகச் சிந்தித்தார். ஒன்றும் விளங்கவில்லை. "நாளை இதுபற்றி ஆராய்ந்து முடிவு செய்யப்படும்" என்றார். மணிக்கோடி முதலியார் காவலில் வைக்கப்பட்டார்.

அன்றிரவு அரண்மனையின் மேல்தளத்தில், நிலாமுற்றத்தில் இப்படியும் அப்படியுமாக இராஜராஜ வேந்தர் உலாவிக்கொண்டிருந்தார். இந்த வழக்கைப் பற்றியே சிந்தித்துத் தெளிவு பெருமல் திகைத்தார். அவருடைய மனதில் பெரிய மலைவு ஏற்பட்டு அவரை வருத்தியது.

சோழ மன்னருடைய தமக்கையார் குந்தவை யென்ற பெருமாட்டியார் அங்கு வந்தார். "என் அருமைத் தம்பீ! நேரம் ஆகிவிட்டது. நீ ஏன் உறங்காது இங்கு உலாவிக்கொண்டு இருக்கின்ருய்? உனக்கென்ன கவலை?" என்று வினவினர். அரசவையில் நடந்த வழக்கைப் பற்றிக் கூறினர். குந்தவை இதனைக் கேட்டு, "தம்பீ! நீ போய் உறங்கு. நாளைக்கு நான் அரசவைக்கு வந்து நியாயம் வழங்குவேன்" என்ருர். அறிவின் சிகரமாக விளங்கும் அக்காளின் ஆறுதல் உரையைக் கேட்ட அரசர் ஆறுதலடைந்தார். தமது சயனத்தில் படுத்து அமைதியாக உறங்கினர்.

அடுத்த நாள் அரசவை கூடிற்று. குந்தவை அங்கு வருகின்ருர் என்று அறிந்து, அவருடைய அறிவு நிறைந்த தீர்ப்பைக் கேட்கும் பொருட்டு மக்கள் திரண்டு கூடியிருந்தார்கள்.

அரியணைமீது ராஜராஜ சோழர் வீற்றிருந்தார். அருகில் சிறந்த ஒரு ஆசனத்தில் தடாதகைப் பிராட்டியாரைப்போல் குந்தவையம்மையார் அமர்ந்திருந்தார். அவருடைய திருமுகத்தில் அறிவுக்கதிர் வீசியது. அந்தப் பெட்டியைக் கொணரச் செய்து குந்தவை கூர்ந்து கவனித்துப் பார்த்தார். சிறிது நேரம் கண்களை மூடிச் சிந்தித்தார்.

"என் அருமைத் தம்பியே! சபையோர்களே? இந்த வழக்கைப் பற்றி நான் நன்கு சிந்தித்தேன். உலக அநுபவம் நிறைந்த சிவநேச முதலியார் மாணிக்கங்களுடன் கருங்கற்களை வைத்தார் என்பது உண்மை. இதில் சிறிதும் ஐயம் இல்லை. மாணிக்கத்துடன் கல்லை வைத்திருக்க மாட்டார் என்று வாதிப்பது அறிவுடைமையாகாது. மணிக்கோடி முதலியார் கரவு செய்யும் குணம் உடையவராக இருப்பாராயின் முழுவதுமே எடுத்துக் கொண்டிருக்கலாம். அவர் ஒன்றுமில்லையென்ருல் யாரே அதை மறுக்க முடியும்? சிவநேச முதலியார் மணிக்கோடி முதலியாரிடம் பெட்டி தந்ததற்குச் சாட்சி யாரும் இல்லை. அவர் வஞ்சிக்கும் இயல்புடையவராக இருப்பாராயின் மாணிக்கத்தை மட்டும் எடுத்திருக்கலாந்தானே? அதற்கு எண்ணிக்கை இல்லையே? கல்லை வைக்கவேண்டிய அவசியம் இல்லையே. என்னிடம் ஒன்றுந் தரவில்லையென்று சொல்லிவிடலாந்தானே? ஆதலால் மணிக்கோடி முதலியார் மாசில்லாதவர். கரவு இல்லாதவர். வஞ்சிக்கும் இயல்பு அவரிடம் அணுத்துணையும் இல்லை. மாணிக்கத்துடன் ஏன் கருங்கற்களை வைத்தார் என்ற வினவுக்கு விடை பகர்கின்றேன்.

இந்த மாணிக்கம் எத்துணை நிறையோ அத்துணை நிறையுள்ள கருங்கற்களை வைத்திருக்க வேண்டும் என்பது என்னுடைய யூகம். இதனை உணராது பலர் பலவாறு பேசுகின்றார்கள். வேண்டுமாயின் பரீட்சித்துப் பாருங்கள்'' என்று கூறினார். முள் துலாக்கோல் கொணர்ந்து, மாணிக்கங்களையும் கருங்கற்களையும் இரு தட்டுக்களில் வைக்கச் சொன்னார். ஒரு குன்றிமணி நிறை குறைவோ கூடவோ இல்லாமல் சமமாக இருந்தது. சிவநேசர் தன் மகனிடம் மாணிக்கந் தரும்போது கருங்கற்களின் எடை மாணிக்கக்கல் இருக்க வேண்டும். மதியூகி எடை போட்டுப் பார்த்துக் கொள்ளட்டும் என்று இப்படி யமைத்தார். இந்தக் கருத்தை யுணராது, மனிதருள் மாணிக்கம் போன்ற மணிக்கோடி முதலியாரைக் கள்வர் என்று சிவபாதசேகரர் கூறினார். கீழேயுள்ள இரு நியாயத் தலங்களும் இத்தகு உத்தமரைக் கள்வர் என்று தீர்ப்பளித்தன. இது பெரும்பிழை. ஆகவே மணிக் கோடி முதலியார் குற்றமற்றவர்'' என்று நேர்மையாகவும் தெளி வாகவும் தீர்ப்பு கூறினார்.

குந்தவைப் பிராட்டியின் தீர்ப்பைக் கேட்டு அரசவை அதிசய முற்றது. அம்மையாரின் அறிவுத் திறத்தை உன்னி உவகையுற்றார் கள். இராஜராஜ சோழர் மனம் மகிழ்ந்தார். சிவபாத சேகரனும் இது சரி என்று உணர்ந்தான். மணிக்கோடி முதலியார் மகிழ்ந்தார் என்று சொல்ல வேண்டுமா?

எல்லோரும் இராஜராஜ சோழரையும் குந்தவைப் பிராட்டி யாரையும் தொழுது குன்றத்தூர் சேர்ந்தார்கள்.

''குற்றமற்ற குணக்குன்றான என் தந்தையாரை வஞ்சக ரென்று மூன்று நியாயத் தலங்களிலும் வழக்கிட்ட ஒருவனை நான் மணஞ் செய்து கொள்ள மாட்டேன'' என்று தேன்மொழி மறுத்து விட்டாள்;

சிவபாதசேகரன் மனம் உடைந்து போனான். தன் அறியாமையை நினைந்து பெரிதும் வருந்தினான். உத்தமரைச் சந்தேகித்து அவருடைய உள்ளம் நோவச் செய்த பெரும் பிழையையும், அப்பிழை காரண மாகத் தான் விரும்பிய மாதரசியாகிய தேன்மொழி தன்னை மணஞ் செய்து கொள்ள மறுத்ததையும் எண்ணி எண்ணி இதயம் நொந் தான். இனி தனக்கு இன்பம் இல்லையென்று கருதினான்.

ஒரு மனிதன் மாணிக்கம் அடங்கிய பெட்டியைக் கொணர்ந்து தேன்மொழியிடம் தந்துவிட்டுச் சென்றான்.

உ

முருகா

# மகாபாரதம்

---

## சாந்தி பர்வம்

### மோக்ஷ தருமம்

(240-ஆம் பக்கத் தொடர்ச்சி)

**நாரதரின் பெருமை**

தருமர் "தந்தைக்குத் தந்தையே! எல்லா வுலகமும் கொண்டாடத்தக்க அன்பன் எவன்?" என்று கேட்டார். பீஷ்மர் கூறுவார்.

உக்கிரசேனன் கண்ணபிரானைப் பார்த்து, "நாரதருடைய பெருமையைக் கூறும்" என்று கேட்டார். வாசுதேவர் கூறுகின்றார்.

''மன்னவரே! நாரதரது பெருமையைச் சுருக்கமாகக் கூறுகின்றேன். நாரதர் நல்லொழுக்கமுள்ளவர்; அவர் அயர்ச்சியில்லாத முயற்சியுடையவர்; காமக்ரோதம் இல்லாதவர்; பொறுமையுள்ளவர்; ஆத்மவித்தையின் உண்மையை யுணர்ந்தவர்; இன்சொல் இயம்புபவர்; உண்மையை உரைப்பவர்; ஆதலால் அங்கும் பூசிக்கப்படுகின்றார். கீர்த்தியாலும் ஞானத்தாலும் வணக்கத்தாலும் தவத்தாலும் பிறவியாலும் அவர் பெரியவர். எல்லாருக்கும் நன்மையே நவில்பவர்; நன்மையே செய்பவர்; பாவமில்லாதவர்; புண்ணிய புருஷர்; உறுதியான பக்தியுள்ளவர். ஆதலால் எங்கும் பூசிக்கப்படுகின்றார். பற்றற்றவர்; பயனை விரும்பாதவர்; தற்புகழ்ச்சியில்லா

---

தேன்மொழி பெட்டியைத் திறந்து பார்த்தாள். மாணிக்கங்கள் அதில் மின்னின. ஒரு கடிதமும் இருந்தது. அதை எடுத்துப் படித்தாள்.

"அன்புள்ள தேன்மொழி!

வீண்பழி சுமத்தி நல்லவரை நனி துயரம் செய்த என்னை நீ மணந்துகொள்ள மறுத்தது நியாயமே? எனக்கு இனி வாழ்வு இல்லை. என் மனத்தில் குடியிருக்கும் பெண் மாணிக்கமே! இந்த மாணிக்கங்களை நான் உனக்குக் காணிக்கையாகத் தந்துவிட்டேன். இக்கடிதத்தைப் படிக்கும் நேரத்தில் நான் துறவியாக இமயத்தில் இருப்பேன். என்னை மன்னித்துவிடு.

இங்ஙனம்
அவசரபுத்தியுள்ள
சிவபாதசேகரன்"

இதனைப் படித்தபோது அவள் கண்கள் குளமாகிவிட்டன.

தவர்; வேதவேதாந்தங்களை நன்கு அறிந்தவர்; நட்புசெய்யும் வித்தை யையறிந்தவர்; பிறருடைய இரகசியங்களை வெளியிடாதவர்; தூயவர்; சாந்தகுணமுள்ளவர்; உறுதியுள்ளவர்; நற்குணங்கள் அனைத்தும் நிறைந்தவர். ஆதலால் எங்கும் பூசிக்கப்படுகின்றார்'' என்று கூறினர். இதனைக் கேட்ட உக்ரசேனன் உவகையுற்றான்.

ஒரு நாள் கண்ணபிரான் தனிமையாக ஒரு மணித்தவிசில் கவலை யுடன் அமர்ந்திருந்தார் நாரதர் அங்கு வந்தார். ''வாசுதேவரே! ஏன் கவலையுடன் இருக்கின்றீர்? சொல்லக் கூடியதானால் சொல்லும்'' என்று கேட்டார். கண்ணபிரான் ''நாரதரே! நண்பனல்லாதவனிடம் என் கவலையைக் கூறக்கூடாது. உம்மிடம் உரைப்பேன். நீர் என் அன்பர். என் உறவினர் என்னைப் பகைக்கின்றார்கள். நிரம்ப என்னிட மிருந்து பொன்னும் பொருளும் பெற்ற அவர்கள் என்னை வெறுக்கின் றார்கள். மறைவில் என்னை இகழ்கின்றார்கள். அதனால் துயரமுறு கின்றேன்'' என்றார்.

நாரதர் ''பகவானே! இரும்பால் செய்யாத ஒரு ஆயுதத்தால் அவர்கள் நாவை அறுத்துவிடும்'' என்றார். கண்ணபிரான் ''நாரதரே! இரும்பாலாகாத ஆயுதம் எது? அது எங்கே யிருக்கின்றது?'' என்று கேட்டார். நாரதர் ''கண்ணா! இரும்பால் செய்யாத ஆயுதம் இன் சொல். நீர் இன்சொல் கூறி அவர்கட்கு பசு, பொன், உடை, மணிகளை நிரம்பக் கொடும். அவர்கள் நா அறுபட்டுவிடும். அவர்கள் இகழ் வதை விட்டுப் புகழ்வார்கள்'' என்றார். கண்ணபிரான் அதுபடியே செய்து கவலை தீர்ந்தார்'' என்று இயம்பினர்.

### வியாசர் சுகருக்கு உபதேசித்தது.

தருமர் ''கௌரவரே! உலகத் தோற்றமும் ஒடுக்கமும் தத்துவ ஞானமும் எனக்கு விளங்குமாறு உபதேசிக்க வேண்டும்'' என்று கேட்டார்.

பீஷ்மர் ''தரும நந்தன! வியாசர் தமது புதல்வராகிய சுகருக்குச் சொன்னவைகளைக் கேள். சுகர் வேதங்கள் அனைத்தையும் ஓதியபின் பிதாவைப் பார்த்து காரண காரியங்களைக் கூறுமாறு கேட்டார். வியாசர், ''மகனே! பிரம்மம் ஒன்றே இருந்தது. அதனிடமிருந்து பிரகிருதி தோன்றியது. அதிலிருந்து மும்மூர்த்திகளும் முக்குணங் களும் தோன்றின. புத்தியும் மனமும் சப்தமும் ஆகாயமும் பரிசமும் வாயுவும், ரூபமும், அக்கினியும், ரசமும் நீரும் கந்தமும் பூமியும் முறையே ஒன்றிலிருந்து ஒன்றாகத் தோன்றின. பரமாத்மா ஒருவரே உருத்திரராக இருந்து ஒடுக்கஞ் செய்கின்றார். விஷ்ணுவாக இருந்து காத்தலைச் செய்கின்றார். பிரம்ம தேவராக இருந்து படைத்தலைச் செய்கின்றார்.

மனித ஆண்டுகள் 360 சேர்ந்தது தேவ வருடம். தேவ வருடம் 4000ம் கிருதயுகம். அதன் முதலும் முடிவும் 400,400 ஆகும். த்ரேதா யுகம் தேவ வருடம் 3000ம் என்று அறிக. அதன் முதலும் முடிவும் 300, 300 என அறிக. தேவ வருடம் 2000ம் துவாபரயுகம். இதன் முதலும் முடிவும் 200 200 ஆகும். கலியுகம் தேவ வருடம் 1000ம் ஆகும். ஆரம்பமும் அந்தமும் 100 100 ஆகும். ஆக தேவ வருடம் 12000ம் சேர்ந்தது ஒரு சதுர்யுகமாகும். ஆயிரம் சதுர்யுகம் சேர்ந்தது பிரம்ம தேவருக்கு ஒரு பகலாகும். அந்தப் பகல் முடிந்தவுடன் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமா ஓய்வு பெறுகின்ருர். அப்போது சூரியன் மிகுந்த ஒளியுடன் உலகத்தை எரிப்பான். உலகத்தில் உள்ள உயிர்கள் யாவும் ஒடுங்கிவிடும். செடி கொடி யாவும் உலர்ந்து உலகம் ஆமை முதுகு போலாகிவிடும். மண் புனலிலும், புனல் கனலிலும், கனல் காற்றிலும் காற்று வெளியிலும் வெளி மனதிலும், மனம் புத்தியிலும் ஒடுங்கிவிடும். திரும்பவும் ஒடுங்கியபடி உற்பத்தியாகும்.

கிருதயுகத்தில் மக்கள் நோயற்று வாழ்வார்கள். பெண்கள் நாயகனையிழப்பதும், தாய் தந்தையர் மக்களை யிழப்பதும் உண்டாக மாட்டா. தர்மம் தலைசிறந்து விளங்கும். திரேதாயுகம் துவாபர யுகம் கலியுகம் முதலிய யுகங்களில் முறையே படிப்படியாக தருமங் குன்றும். கிருதயுகத்தில் ஞானமும், திரேதாயுகத்தில் யாகமும் துவாபரயுகத்தில் தானமும் கலியுகத்தில் பக்தியும் முக்கியமாகும்.

அந்தணன் வேதங்களை ஓதியும் ஓதுவித்தும், உயிர்களுக்கு நன்மை செய்து கொண்டும் வாழவேண்டும். யஜனம் யாஜனம் அத்யயனம், அத்தியாபனம் பிரதானம் பிரதிக்ரஹம் என்ற ஆறு கர்மங்களையும் ஐந்து யாகங்களைச் செய்து கொண்டும் ஒழுகவேண்டும்.

ஞானம் என்ற தெப்பத்தால் பிறவிப் பெருங்கடலைக் கடக்க வேண்டும். ஞானம் என்ற ஒன்றே முத்திக்குக் காரணம். யோகம் என்ற தேரில் ஏறி பரமபதத்தை யடையவேண்டும். யோகிக்கு அணிமா முதலிய அஷ்ட சித்திகளும் ஏவல் புரியும்.

உலகத்தை யறிய விரும்புகின்ற மூடர்கள் தன் ஆன்மாவையறிய முயற்சி செய்கின்ருர்களில்லை. தன் ஆத்மாவை யறிந்தவனே எல்லா வற்றையும் அறிந்தவனுவான். ஆத்மாவை யறிந்து, உயிர்க்குயிராகிய பரமாத்மாவை யறிந்த உத்தமன் பிரம்மமாகின்றுன், இத்தகைய ஞானிகள் சென்ற வழியை யறிய முடியாது. பறவை சென்ற வழியை விண்ணிலும், மீன் சென்ற வழியை நீரிலும் அறிய முடியாதல்லவா?

பிரமசர்யம் என்ற முதற்படியை அநுசரிக்கின்றவன் குருவிடம் பயபக்தியுடன் இருக்கவேண்டும். பின்னர் முறைப்படி இல்லறத்தை மேற்கொள்ள வேண்டும். இல்லறத்தான் தனக்கு என்று சமைக்கக் கூடாது. அதிதிகட்கென்றே சமைக்கவேண்டும். அதிதிகட்கும் பணி

யாளர்கட்கும் படைத்த மிகுதியை உண்ணவேண்டும். வானப்ரஸ்த ளுகி வனத்தில் வசித்து தவஞ் செய்யவேண்டும். பின்னர் எல்லாவற் றையும் விட்டு சந்யாசியாகி தவஞ்செய்து பரம்பொருளை யடைய வேண்டும். சந்யாசிகள், கூட்டத்தைக் கண்டால் பாம்பைக் கண்டது போலவும், சம்மானத்தைக் கண்டால் விஷத்தைக் கண்டது போல வும், பெண்களைக் கண்டால் பிரேதத்தைக் கண்டது போலவும் பயப்பட வேண்டும். அவன்தான் உண்மையில் சந்யாசி. மரணத்தை யும் வாழ்வையும் விரும்பாமல் உடம்பு முகந்துகொண்ட கன்மத்தை நுகரச் செய்து காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு வாழவேண்டும். யானையின் அடியில் எல்லாப் பிராணிகளின் காலடிகள் அடங்குவது போல், துறவியின் பாதத்தில் இந்திரன் முதலிய சகல பாதங்களும் அடங்கிவிடும்.

மகிழ்ச்சி தெளிவு கருணை முதலியவை சத்வ குணத்தின் தன்மை கள்; லோபம், கோபம், ஆடம்பரம் மோகம் முதலியவை இராசத குணத்தின் தன்மைகள்; நித்திரை, சோம்பல் அறியாமை முதலியவை கள் தாமத குணத்தின் தன்மைகள். ஞானிகள் இந்த முக்குணங்களை யுங் கடந்தவர்கள். நீ ஞானநெறி நின்று பிரம்மத்தை யடைவாய்" என்று உபதேசித்தார்.

## வியாசர் ஆத்மாவை யறியும் வகையைச் சுகருக்கு உபதேசித்தது

வியாசர் "மகனே! ஆத்மாவை யறிந்தவன் அனைத்தையும் அறிந் தவனாகின்றான். மனம் முதலிய இந்திரியங்களை அடக்கினவன் ஆத்ம தரிசனஞ் செய்கின்றான். இந்திரியங்களைக் காட்டிலும் விஷயங்கள் மேலானவைகள். விஷயங்களைக் காட்டிலும் மனம் மேலானது. மனத்தைக் காட்டிலும் புத்தி மேலானது; புத்தியைக் காட்டிலும் ஆத்மா மேலானது. அதைக் காட்டிலும் மூலப்ருகிருதி மேலானது. அதைக் காட்டிலும் பரமாத்மா மேலானது. பரமாத்மாவுக்கு மேற் பட்டது வேறு எதுவும் இல்லை. அதுதான் எல்லை. பரமாத்மா முத்தி வடிவினன். பரமாத்மாவைப் பலர் காண்பதில்லை; ஞானிகள் மட்டும் மெய்யுணர்வினால் காண்கின்றார்கள். தன்னை யறிந்தவன் முன்னை வினை கெட்டு முத்தி பெறுகின்றான். காற்றில்லாத இடத்தில் விளக்கு எப்படி அசையாமல் எரியுமோ அப்படி இரவிலும் பகலிலும் சுகமாக இருப்பான். இது வேத வேதாந்த ரகசியம், கட்டையைக் கடைந்து கனல் எடுப்பது போலவும், தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுப்பது போலும் ஆத்மஞானம் சாத்திரத்தைக் கடைந்து எடுக்கவேண்டும். அதை உத்தம அதிகாரிக்கு மட்டுமே உபதேசிக்க வேண்டும். சமம், தமம், தவம், வேதாத்தியயனம், குருவை யநுசரித்தல் இவைகளில்லா தவனுக்கும், கோள் சொல்லுகின்றவனுக்கும், ஒழுங்கில்லாதவனுக்

கும் சொல்லக் கூடாது. இரத்தின மணிகள் நிறைந்த இந்தப் பூமியைக் காட்டிலும் இந்தத் தத்துவமே பெரிதென்று நினைக்கவேண்டும். குழந்தாய்! இனி உனக்கு என்ன ஐயப்பாடுளதோ? அதைக் கேள். கூறுகின்றேன்'' என்றார்.

## அத்யாத்ம தருமம்

சுகர் ''முனி சிகாமணியே? அத்யாத்ம தருமத்தைச் சொல்லும்'' என்று வினவினர்.

வியாசர் ''மகனே! கடலில் அலைகள் தோன்றுவதுபோல், மூலப்ரு கிருதியிலிருந்து, மண் நீர் நெருப்பு காற்று வெளி என்ற ஐம்பெரும் பூதங்கள் தோன்றின. இவைகளிலிருந்து எல்லா வுயிர்கட்கும் உடம்புகள் அமைந்தன. எனவே உலகமனைத்தும் பஞ்சபூத மய மாகவே இருக்கின்றது. மண்ணின் குணம் மணம்; நீரின் குணம் சுவை, நெருப்பின் குணம் வடிவம்; காற்றின்குணம் பரிசம்; விண்ணின் குணம் ஓசை. இவற்றை சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பர். ஆமையி லிருந்து ஐந்து உறுப்புக்கள் வெளிப்பட்டு ஒடுங்குவதுபோல் பஞ்ச பூதங்களிலிருந்து பஞ்சதன்மாத்திரைகள் தோன்றி யொடுங்கு கின்றன. மனிதனிடத்தில் இந்திரியங்கள் ஐந்தாகவும், மனம் ஆருவ தாகவும், புத்தி ஏழாவதாகவும், ஜீவன் எட்டாவதாகவும் சொல்லப் படுகின்றன. மனம் ஐயத்தை யுண்டாக்குகின்றது; புத்தி நிச்சயம் செய்கின்றது. க்ஷேத்ரக்ஞனை ஜீவன் சாட்சியாகச் சொல்லப்படு கின்றுன். சத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்கள் பூர்வ வாசனையால் உண்டாகின்றன. முக்குணங்களையுங் கடந்தவன் சோகத்தையும் மோகத்தையுங் கடக்கின்றுன். நீரில் உலாவும் மீன் நீரின் தொடர்பை யடையாததுபோல் ஞானி உலகத்திலிருந்தாலும் உலகத் தொடர்பை யடைய மாட்டான். விருப்பு வெறுப்பின்றி விளங்குவான்'' என்றார்.

## ஆத்மஞானம்

சுகர் ''பிதாவே! இவ்வுலகில் எந்தத் தருமத்திற்கு மேலாக ஒரு தருமம் இல்லையோ, எல்லாத் தருமங்களைக் காட்டிலும் சிறந்த அந்தத் தருமத்தை எனக்கு நன்ருகச் சொல்ல வேண்டும்'' என்று கேட்டார். வியாசர் சொல்லலானுர்.

''புராதனமும் முனிவர்களால் புகழப்பட்டதும் எல்லாத் தருமங் களைக் காட்டிலும் சிறந்ததுமான தருமத்தை உனக்கு உபதேசிக்கின் றேன். ஒரு மனதுடன் கேள். தந்தை சிறு குழந்தைகளை யடக்குவது போல்,துள்ளித் துடித்தும் எங்கும் ஓடித் திரிகின்ற குணத்தையும் இந் திரியங்களையும் ஒரு வழிப்படுத்துவதே பெரிய தவம். இது மிகவும் உயர்ந்தது. இந்தத் தருமம் எல்லாத் தருமங்களைக் காட்டிலும் சிறந்

தது. மனத்தை ஒடுக்கியவன் பரமாத்மாவைப் பார்க்கின்றான். ஞான வொளியால் அவன் ஆத்மாவைப் பார்க்கின்றான். நீ சிறந்த ஞானத்தால் பிறவிப் பெருங்கடலைக் கடப்பாயாக. பரம்பொருள் ஆணுமன்று; பெண்ணுமன்று; அலியுமன்று. அது எக்காலத்தும் இருப்பது. பரம்பொருளை யடைய விரும்புவன் உலக இன்பங்களையும் புகழையும் விரும்பக்கூடாது. எந்த வுயிர்களுக்கும் பயத்தை உண்டாக்காதவன் என்றும் எவ்விடத்திலும் பயம் அடைய மாட்டான். விருப்பங்களை அடக்கினவன் முத்தி நலம் பெறுகின்றான். வேதத்தினுடைய இரகசியம் சத்தியம், சத்தியத்தினுடைய இரகசியம் அடக்கம்; அடக்கத்தின் இரகசியம் தானம்; தானத்தின் இரகசியம் தவம்; தவத்தின் இரகசியம் சந்யாசம்; சந்யாசத்தின் இரகசியம் சுகம்; சுகத்தின் இரகசியம் ஸகுணப் பிரம்மபாவம்; அதன் இரகசியம் நிர்க்குணப் பிரம்ம பாவம். கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்ற மூன்றினாலும் முத்தனாகின்றான், எல்லாம் அற்ற தனி நிலையடைந்தவன் இறப்பு பிறப்பு அடைவதில்லை. அவன் மீண்டு வராத உத்தம கதியை யடைகின்றான்'' என்று வியாசர் சுகருக்கு உபதேசித்தார்.

## மிருத்யு

பீஷ்மரை நோக்கி தருமர் ''பிதாமகரே! போர்க்களத்தில் பதினாயிரம் யானை பலம் படைத்தவர்களும், வெல்லக் கூடாதவர்களுமான அரசர்கள் மாண்டார்களே? அந்த மரணம எப்படி வந்தது?'' என்று கேட்டார்.

பிதாமகர் ''கிருதயுகத்தில் அகம்பனன் என்ற அரசன் இருந்தான். அவன் போரில் பகைவரால் தன் சேனைகளையும் அரி என்ற புதல்வனையும் இழந்து மிகுந்த துயரத்தை யடைந்தான். நாரதரைச் சந்தித்தான். தன் துயரங்களைக் கூறினான். அப்போது நாரதர் கூறுவாரானார்.

"பிரம்மதேவர் உலகங்களை யெல்லாம் உண்டாக்கினார். அப்போது கிழத்தனத்தை யடைந்தும் மனிதர்கள் இறவாமல் வாழ்ந்தார்கள். எள்ளிருக்க இடமின்றி உயிர்க்கூட்டங்கள் பெருகின. அதனால் பூமி நடுங்கிற்று. பிரம்மதேவர் சீற்றமுற்றார். உருத்திரமூர்த்தி அவருக்கு ஆறுதல் கூறினார்.

பிரமதேவருடைய கோபத் தீயில் அழகுள்ள ஒரு பெண் தோன்றினாள். அவள் சகல அணிகலன்களையும் அணிந்தவளாய் தென்திசையில் நின்றாள். பிரமதேவர் "ஏ மிருத்யுவே! நீ இந்த உயிர்களை சங்காரஞ் செய்'' என்று கட்டளையிட்டார். அவள் அதற்கு இசைந்தாளில்லை இந்தக் கொடிய தொழிலை நான் செய்யமாட்டேன். இந்த தொழிலில் என்னை ஏவ வேண்டாம்'' என்று கூறி மறுத்தாள். அவள் பல கோடி யாண்டுகள் ஒரு காலில் நின்று தவஞ் செய்தாள். பிரமதேவர் அவளுக்கு முன் தோன்றி, அவளுடைய கண்களிலிருந்து பெருகிய நீரைத் தம் கையால் ஏற்றார். "அம்மா! இந்தக் கண்ணீர்த் துளிகள் நோய்களாக உருவந்தாங்கி உயிர்களைப் பற்றட்டும். அப்போது உயிர்களைக் கொல்லக் கடவாய். பழி நோய்கள்மீது சாரும்; உலகம் உன்னை நிந்திக்காது'' என்று கூறினார். அதுபடியே! உயிர்களின் காலாந்தரத்தில் மிருத்யுவானவள் உயிர்களைத் தன் கண்ணீரான, நோய்களின் மூலம் கொல்லுகின்றாள். இதுதான் உயிர்களின் மரணத்தின் இரகசியம்'' என்று நாரதர் அகம்பனனுக்குக் கூறி ஆறுதல் செய்தார்'' என்றார்.

(தொடரும்)

## அடுத்த ஆண்டுச் சந்தா

மலேஷியா, சிங்கப்பூர் மற்றும் (இலங்கை தவிர) வெளிநாடுகளிலுள்ள சந்தா நேயர்கள் அடுத்த ஆண்டுக்கான தங்கள் சந்தாத் தொகைகளை உடனே அனுப்பிவைக்க வேண்டுகின்றோம். சந்தாத் தொகையை Money Order மூலமே அனுப்பவும் - B. P. O. (பிரிடிஷ் போஸ்டல் ஆர்டர்களோ) பாங்கு டிராப்டுகளோ அனுப்பவேண்டாம். Money Order மூலமனுப்பிவிட்டு ஒரு கடிதம் எழுதிவிடுவதே எளிய வழி. மற்றவைகள் வழியில் தவறிவிட்டாலோ, வேறு எழுதவேண்டிவைகளைச் சரிவர எழுதாவிட்டாலோ வீண் பிரயாசை ஏற்படும். ஆகவே Money Order மூலம் அனுப்புவதே நல்லது.

வெளிநாட்டுச் சந்தா ரூ 5 - 50.

வசதிப்படுவோர் பின்வரும் அன்பர்களிடம் நேரில் செலுத்தலாம்.

1. திரு. K. K. மாணிக்க முதலியார்,
   44, Gopeng Road, Penang.
2. திரு. G. Kulandaivelu Thevar
   46, Jalan Chermai off Jalan Raja Muda, KualaLumpur.
3. திரு. A. S. நாகலிங்கம்,
   25, Hoover Park, Hose Road, Teluk Anson (Perak)

---